பரவும்புராணத்திறங்களொருபதினெட்டாலும்பன்னுமுப
மிருதியநுமூன்றூலுஞ்சீர்மேவுமுபபார்புராணத்தில்
நினைவுநாலுன்குடனிரண்டாய்நிகழுந்தொகையினெறியாலும்
விரிபாரதராமாயணமாய்விளைபஞ்சவேதத்தாலும். (உச)

வரசங்கிதையின்றொகையாலும்வைகாநசநற்பஞ்சவிராத்
திரநூலாலுமுலகுக்குத்திட்டாந்தச்சோதிடத்தாலும்
விரியும்பொருளாலாராயும்வேதமாம்வாகடத்தாலும்
தெரியும்கானந்தரும்வேதஞ்சிறக்கும்பரதநூலாலும். (உரு)

திண்ணம்புனையுந்திசைக்கிரியைச்சிங்காரத்தாற்சிறப்பெய்த
நண்ணும்புவியிற்றிறமாகநாட்டும்பிரமாணமதாகி
வண்ணந்திகழுஞ்சிற்பமெனும்வருக்கமிகுசாத்திரத்தாலும்
எண்ணுஞ்சைவாகமமானேயியல்பாகவெடுத்திசைவித்தேன். (உசு)

மைத்தார்குழலாயாகையினுன்மறைபோற்றியநாராயணனுக்
கெத்தேவர்களுந்தேகமதாயிருக்குமவராகையினலும்
ஒத்தார்மிக்காரில்லாவவ்வொருவன்சகலசத்தத்தின்
வித்தாரகாரவாச்சியனுய்விளங்குமேன்மையதனுலும். (உஎ)

கோதிலாவக்நாரணனேகூறுஞ்சருவாந்தரியாமி
ஆதலாலுமவன்றன்னையாராரொந்தப்பேரோதி
ஓதியெந்தவிதத்தருவாயொளியாயுருவாய்த்தியானித்து
மேதையுடனேயெங்கெந்தவிதத்தாற்பூசைசெய்தாலும். (உஅ)

அந்தவந்தமாந்தர்களுக்கந்தவந்தமூர்த்திகளில்
சந்தமுந்தந்திரியாமிதானுயிருந்துதகுநதரத்தால்
எந்தவெந்தப்பலன்களையுமீவானுராயணனேயென்
றுந்தும்பகவற்கீதைதனிலோதுமுண்மைப்படியாலே. (உகூ)

ஏதமில்லாவுலகத்திலெங்குந்தானுயிருந்தருளிக்
கோதில்லாதபூசையெல்லாங்கொள்வானுராயணனென்றே
காதல்கூரவொன்ருகக்காணுமதுவேயறிதென்றுள்
ஓகைகூராகமமானுமொக்குமென்றேயுளந்தெளிந்தாள் (௩௰)

பானேர்மொழியார்தங்களிவிப்படிச்சம்மதமாய்ப்பகர்தலுமே
ஞானதிகராயங்கிருந்தநன்மாமகத்தோரனைவோரும்
பூனேர்குழலீரிவ்விடத்துப்புகன்றமொழியுமுத்தரமும்
மேனீரிசைந்தவுடன்பாடுமிகநன்றென்றுவியப்புற்றார். (௩௧)

இன்னபடியாற்சங்கரன்மாலென்னுமிருவோர்மகிமையெல்லாம்
பன்னியறிவாற்பூருவமாம்பக்கஞ்சித்தாந்தந்தோன்ற
மின்னினிடையாகமவல்லிவேதவல்லியெனுமாதர்
சொன்னதாகச்சொன்னதமிழ்ச்சுருதியானசாத்திரத்தை. (௩௨)

மீனவுருவாய்ச்சோமுகனைவென்றுவேதங்களைப்பிரமன்
ஆனசுதனுர்களித்துலகுக்காதியர்ச்சாவதாரனுமாய்
வானநதிநேராரணியின்வடதீரத்துவேதபுரித்
தானநின்றகருமணியந்தாமப்பெருமான்சந்நிதியில். (௩௩)

மன்னுன்மறைபோலெமக்குவகைவழங்குமதனுலினிவுலகில்
தன்னேரில்லாவிந்நூல்போற்றகைமைபெறுநூன்மற்றில்லை
யென்னுவவையோருளமிறும்பூதெய்தத்திருக்கோயிலினின்று
மின்னூர்திகரிப்படைப்பரமன்விளம்பியிட்டபடியாலும். (௩௪)

பரவுசுருதிசாத்திரசம்பன்னராளவனைவோரும்
பெருமையானவறுசமயப்பேரும்பிறருஞ்சம்மதிக்க
உரிமையானபொருள்விரித்தாங்குகந்தேயரங்கேற்றிடுமந்நாள்
பரமன்கரியபிரானுகந்தாபரணமளித்தபடியாலும். (௩௫)

வெள்ளைத்துகிலையிடையுடுத்துவெள்ளைக்கலன்கள் மிளிர்ந்தொளிரத்
தள்ளற்கரியபேருவகைதலைக்கொண்டோடிச்சவைகாண
உள்ளத்தெளிவாமிந்நூறன்னெண்மார்பணைத்துக்கலைமகடன்
வள்ளற்கரத்தான்முறுவலித்துமகிழ்ந்தேயீந்தபடியாலும். (௩௬)

கிளரும்புகழ்சேரவ்வேதகிரியெம்பெருமான்வேதாந்தத்
தெளிவின்பயனைத்தமிழாகச்செய்தவிந்தத்திருமுறையை
ஒளிருஞ்சபையோர்கண்காணவுலகோராய்ந்ததம்பத்தின்
அளவுமெதிரோசென்றூரவங்கீகரித்தபடியாலும். (௩௭)

பரம்புஞ்சைவர்முதலாயபரவாதியர்களுளந்தெளிய
நிரம்புங்கேள்வியவைக்களத்தோர்நீடுங்கருமாமணிவண்ணன்
வரம்பில்சீர்க்கோயிலின்முன்னர்வயங்குபெருந்தீவளர்த்ததனில்
திரம்பொங்கிந்நூல்பகலளவிட்டெடுக்கத்தீயாப்படியாலும். (௩௮)

மிகுமிந்நூல்போற்றெய்வீகம்விளைந்தநூல்கள்வேறில்லைத்
தொகைமன்னியவிப்பெருநூலிற்சொன்னபரமார்த்தந்தன்னில்
இகலொன்றின்றிநிறைவேறவெவருட்பட்டாரவர்தாமே
நிகரின்றியபூதலமீதுநீடுஞ்சருவஞ்ஞியராவார். (௩௯)

அரிதைப்பதிவாழரிதாதனருமாமறையைத்தமிழ்செய்து
விரிவுற்றுணாத்தவிருசமயவிளக்கநூலின்பரமாத்தம்
பரிவுற்றுணர்வாரதுகேட்பார்படிப்பார்பாராட்டுதல்செய்வார்
இருமைப்பயனென்றுரைக்கின்றவிகமும்பரமும்பெருவாரே. (௪௰)

சித்தாந்தப்படலம் முற்றும் ஆ திருவிருத்தம் ௬௩.

காண்டம் ௪௫ படலம் ௨௬௫ பரிச்சேதம் ௱௩௰௫ கூடிய

திருவிருத்தம் ௨௲௰௯ இருசமயவிளக்கம் முற்றிற்று.

அரிதாசர்திருவடிகளேசரணம்.



ஹ ரி ஓ ம்.

# இருசமயவிளக்கத்தின் அட்டவணை.



முற்றும்.

